# THE MADURA-RAMNAD DIOCESAN MAGAZINE

## SATHIAVARTHAMANI

**MARCH, 1954**





# மதுரை-ராமநாதபுரம்

# அத்தியட்சாதீனத் தீபிகை

## சத்தியவர்த்தமானி

**மார்ச்சு, 1954**

Best copy available

மதுரை-ராமநாதபுரம் அத்தியட்சாதீனத் தீபிகை

பத்திராதிபர் :— A. சாமுவேல் ஐயர், செமினரி, பசுமலை.

உதவி பத்திராதிபர் :— C. S. தவமணி ஐயர், மண்டபம் கேம்ப்.

மானேஜர் :— கனம் ஜாஷ்வா அவர்கள், மதுரை-ராமநாதபுரம்,
அத்தியட்சாதீன பொக்கிஷதார்,
211 தெற்கு மாரட் வீதி, மதுரை.

பத்திரிகைக் கமிற்றி :—

கனம் பிரடரிக் ஜேக்கப், மதுரை.
„ தேவப்பிரகாசம் ஐயர், திண்டுக்கல்.
„ தவமணி ஐயர், மண்டபம் கேம்ப்.
„ ஜாஷ்வா, அத்தியட்சாதீன பொக்கிஷதார்.
„ A. சாமுவேல் ஐயர், பசுமலை. (தலைவர்.)

## முக்கிய பொருளடக்கம்.





தென் இந்திய சபையைச் சேர்ந்த
மதுரை—இராமநாதபுரம் அத்தியட்சாதீனத்தின்

# சத்திய வர்த்தமானி

புஸ்தகம் XV பசுமலை, மார்ச் 1954 இலக்கம் 5

வருடசந்தா : 1 ரு. 8 அணா. தபாற்கூலி உட்பட.

## அத்தியட்சரின் கடிதம்

தல்லாகுளம், மதுரை,
பெப்ரவரி 27, 1954.

கிறிஸ்துவுக்குள் அன்புள்ள மக்களே :—

பெப்ரவரி மீ 7௳ மதுரையில் பற்பல ஸ்தாபனங்களில் உழைத்துவரும் கிறிஸ்தவ சர்க்கார் உத்தியோகஸ்தர், வக்கீல்கள், குமஸ்தாக்கள் மற்றும் பலதுறைகளில் அலுவலாயிருப்பவர்களுக்கென்று கூட்டம் நடந்தது. சுமார் 80 பேர் கூடி ஒருநாள் முழுவதும் ஆலோசித்தனர். இந்த நல்ல தருணத்திற்காக அநேகர் தங்கள் நல்லாசியைத் தெரிவித்துள்ளனர். இப்படிப்பட்ட ஓர் கூட்டம் மறுபடியும் ஏப்ரல் மாதம் நடைபெறுமென எதிர்பார்க்கிறேன். கிறிஸ்தவ ஜீவியத்திற்கும் சாட்சி பகருவதற்கும் இக்கூட்டம் அநேக லேமென்களுக்கு உதவியாயிருக்கும் என்பது எனது நம்பிக்கை.

பெப்ரவரி 15—20௳களில் நமது கீழவாசல் ஆஸ்பத்திரி சுகாதார சம்பந்தமாய் ஒரு கண்காட்சி நடத்தினர். சுமார் 20,000 பேர் இதைப்பார்த்தனர். தகுந்த கவனம் செலுத்துவதால் வியாதிகள் தடுக்கப்படலாம் என்பது தத்ரூபமாய்க் காட்டப்பட்டது. கடந்த காலத்தில் சிகிட்சை ஊழியம் மிகுதியாய் வியாதியஸ்தர்களுக்குள்ளேயே செய்யப்பட்டது. ஆனால் வியாதி முற்றும் வராமலே தடுக்கக்கூடிய வழிவகைகளை மக்களுக்குப் புகட்டும்படி வைத்தியர்கள் தற்போது ஆவல் கொண்டுள்ளனர். தடுப்பு முறைகளில் சபை ஈடுபடவேண்டுமென்று நமது கிறிஸ்தவ வைத்தியர்கள் ஊக்கமளித்து வருகிறார்கள். இதன் சம்பந்தமாய் இந்த ஆண்டில் திருமங்கலத்தில் நடக்கும் ஞானபோத ஸ்தாபனக் கூட்டங்களில்வழக்கத்திற்கு மேல் ஒருநாள் கூட்டி தடுப்பு முறைகளைப் போதிக்க ஏற்பாடாகி வருகிறது. இப்படிக் கற்றுக்கொள்வதின் மூலம் நம் நாட்டிற்குச் சிறந்த சேவை செய்யலாமென்றும், நமது ஊழியத்தில் இது ஓர் நல்ல அபிவிருத்தி என்றும் நான் நம்புகிறேன்.

இந்த மாதம் அநேக சபைகளில் நடந்த ஸ்தோத்திரப் பண்டிகைகளில் பங்கெடுத்தேன். அநேக சபைகள் காட்டிய உதாரத்துவத்திற்காக இதயப் பூர்வமான நன்றியைக் கடவுளுக்குச் செலுத்துகிறேன். இப்பண்டிகைகளை உங்கள் ஜெபங்களில் நினைத்துக்கொள்ளுங்கள். இப்பண்டிகைகளைக் கடவுள் நமது சபைகள் உயிர்மீட்சி அடையவும் கடன்கள் தீரவும் உபயோகிக்க ஜெபிப்போமாக.

மார்ச்சு மீ௴த்தில் அநேக காரியங்களுக்காக ஜெபிக்க உங்களைக் கேட்கிறேன். அத்தியட்சாதீன நிரந்தரக் கமிற்றிகள் மார்ச்சு 9௳, 22-27௳ களில் நடைபெறும். குருமாரின் மாறுதல்கள் உட்பட அநேக கஷ்டமான பிரச்சினைகள் உண்டு. கடவுளுடைய வழி நடத்துதலுக்காக உங்கள் தாபந்தமான ஜெபங்கள் தேவை 11-ம௳ ஸினடின் நிர்வாகக் கமிற்றி பெங்களூரில் கூடுகிறது. 12-16௳களில் லுத்தரன் சபைப் பிரதிநிதிகளோடு ஐக்யசம்பந்தமாய்க் கூட்டங்கள் நடைபெறும். இக் கூட்டங்களில் கடவுளின் நாமம் மகிமைப்படவும் அவர் சித்தம் செய்யப்படவும் ஜெபியுங்கள்.

உங்களை ஜெபிக்கக் கேட்பது வெறும் கடமைக்காகவல்ல. நாம் ஒருவருக்கொருவர் செய்யும் சிறந்த பணி ஜெபமே சோர்ந்து போகாத உண்மையான ஜெபமே நமது சபையின் பெரும் தேவை. ஜெபிக்கும்படி நீங்கள் என்னைக் கேட்பது எனக்கு எப்போதும் சந்தோஷம். என் அன்றாடக ஜெபங்களில் நானும் உங்களுக்காக மன்றாடுவேன். இவ்விதமாய் ஜெபத்தை நம் சேவையின் மையமாக்கும்போது மெய்யாகவே நாம் கடவுளுடைய சித்தத்தை நிறைவேற்றுகிறோம்.

இப்படிக்கு,
கிறிஸ்துவுக்குள் உங்களன்புள்ள ஊழியன்,
**லெஸ்லிநியூபிகின்,**
அத்தியட்சர்.

---

## அத்தியட்சரின் அலுவல்கள்

| | | |
|---|---|---|
| மார்ச்சு | 9 | உயர்நிலைப்பள்ளிக் கமிற்றி. |
| | 11 | ஸினடின் நிர்வாகக் கமிற்றி—பெங்களூர். |
| | 12-16 | லுத்தரன் சபையோடு ஆலோசனைக் கூட்டம் பெங்களூர். |
| | 19 | இரட்சண்யபுரம் திடப்படுத்தல் |
| | 20 | அமெரிக்கன் கல்லூரி கவுன்சில். |
| | 21 | ஸ்தோத்திர விழா காலை—திருமங்கலம். மாலை—பசுமலை. |
| | 22, 25—27 | அத்தியட்சாதீன நிரந்தரக் கமிற்றிகள். |
| | 23—24 | ஞானபோத ஸ்தாபனக் கூட்டம், வத்தலகுண்டு. |
| | 28 | ஸ்தோத்திர விழா காலை—மேலூர் மாலை—மல்லன்கிணர். |
| | 29 | ஸ்தோத்திர விழா—சோதகுடி. |
| | 30, 31 | ஞானபோத ஸ்தாபனக் கூட்டம், சாட்சியாபுரம். |
| ஏப்ரல் | 1, 2 | கொடைக்கானல். |
| | 3—4 | கம்பம். |
| | 5 | ஸ்தோத்திர விழா, தேனி. |
| | 6—7 | கமிற்றிக் கூட்டங்கள். |
| | 9—10 | நிர்வாகக் கமிற்றி. |






---

## திருச்சபைச் செய்திகள்

1. சபையின் திருநாட்கள்.

| | | |
|---|---|---|
| ஏப்ரல் | 4 | லெந்து ஞாயிறு 5. |
| | 11 | குருத்தோலை ஞாயிறு. |
| | 12 | பரிசுத்த வாரம்—திங்கள். |
| | 13 | ,, செவ்வாய். |
| | 14 | ,, புதன். |
| | 15 | ,, பெரிய வியாழன். |
| | 16 | ,, பெரிய வெள்ளி. |
| | 17 | ,, சனி |
| | 18 | உயிர்த்தெழுந்த பண்டிகை. |
| | 25 | உயிர். திரு. பின் ஞாயிறு 1. (பரி. மாற்குவின் திருநாள்) |

**2. இந்திய கிறிஸ்தவ வைத்திய சங்கத்தைப்பற்றி சில குறிப்புகள்.**

1953ம் வருஷத்தில் இந்த சங்கத்தின் அங்கத்தினர் மொத்தம் சுமார் 700—730 பேர் அடங்கியுள்ளனர். இவர்கள் சபையைச் சேர்ந்த கிறிஸ்தவ வைத்தியர்கள், அரசாங்க உத்தியோகஸ்தர்கள், தனிப்பட்ட தொழில் உள்ளவர்கள் ஆவர். இந்த சங்கமும் அதன் காரியஸ்தர்களும் 16,000 கட்டில்கள் உள்ள 225 கிறிஸ்தவ வைத்திய சாலைகளுக்கும், 200 கிறிஸ்தவ மருந்து சாலைகளுக்கும், 1000 கட்டில்கள் உள்ள 9 கிறிஸ்தவ க்ஷயரோக வைத்தியசாலைகளுக்கும், 60 குஷ்டரோக வைத்தியசாலைகளுக்கும் உதவி செய்யக்கூடியவர்களாக இருக்கிறார்கள். எப்படியெனில் ஒவ்வொரு வருஷமும் பல ஸ்தாபனங்களில் நடத்தப்பட்டு வருகிற ஆலோசனைக்கூட்டங்களினாலும், காரியதரிசிகள் ஒவ்வொரு வைத்தியசாலையையும் நேரே போய்ப் பார்வையிடுவதினாலும் இதற்குத் தகுந்த உதவி ஏற்படக்கூடியதாக இருக்கிறது.

சென்ற வருஷத்தில் அஸ்ஸாம், பஞ்சாப், கிழக்கு வங்காளம், ஒரிஸ்ஸா, பீகார், ஆந்திரா, தமிழ் நாடுகள் ஆகிய இவைகளிலுள்ள வைத்தியசாலைகளைப் பார்வையிட்டிருக்கிறார்கள்.

1953ம் வருஷம் அக்டோபர் மாதம் லூடியானாவில் கிறிஸ்தவ வைத்திய கல்லூரியில் முதன்முதலாக M.B.B.S. வகுப்பு ஆரம்பித்திருக்கிறது. வேலூரில் ஒவ்வொரு வருஷமும் 50 மாணவர் தெரிந்தெடுக்கப்படுகிறார்கள்.

70 கிறிஸ்தவ வைத்தியசாலைகளில் தாதிப்பயிற்சி பயிற்றுவிக்கப்பட்டு வருகிறது. 9 வைத்தியசாலைகளில் லபோரேட்டரி பரிசோதனை பயிற்சி அளிக்கப்படுகிறது. வேலூரில் X-Ray மூலமாக படம் எடுக்கும் பரிசோதனைப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

இந்த கிறிஸ்தவ வைத்திய சங்கமும் சுதேச கிறிஸ்தவ ஆலோசனைச் சங்கமும் கடந்த செப்டம்பர் மாதம் வேலூரில் ஒன்றுகூடி வைத்தியசாலை மூலமாக சுவிசேஷவேலை செய்வதைப்பற்றி ஒரு ஆலோசனைக்கூட்டம் நடத்தினார்கள். அச்சமயம் 42 பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

இச்சங்கத்தினர் இரண்டு வருஷத்திற்கு ஒருமுறை கூடும் ஆலோசனைக்கூட்டம் சென்ற வருஷம் நாகப்பூரில் அக்டோபர் 24-27ல் நடைபெற்றது. 88 வைத்தியர், 19 தாதிகள், வெளியில் இருந்துவந்த 9 சிநேகிதர் வந்திருந்தனர்.

கிறிஸ்தவ வைத்திய சங்கத்துக்காகக் கட்டப்பட்டு வருகிற கட்டடத்தின் வேலை முற்றுப்பெறப் பணம் அவசியமாகத் தேவையிருக்கிறது. பிப்ரவரி 14, 1954ல் நடைபெற்ற வைத்தியசாலை ஞாயிற்றுக்கிழமையில் மேற்கூறிய விஷயத்திற்காக நீங்கள் உங்கள் காணிக்கைகளைக் கொடுத்திருப்பீர்கள்.

சென்ற 1953ம் வருஷம் வைத்தியசாலை ஞாயிற்றுக்கிழமை நம் சபைகளிலிருந்து வந்த காணிக்கை சுமார் ரூ. 2800.





# தெய்வீக அன்பு—1954

## இயேசுகிறிஸ்து நாதரின் வாழ்க்கைவரலாற்று திருக்காட்சி

நடைபெறும் நாட்கள்

மார்ச்சு **20, 27,** சனி, ஏப்ரல் **16,** பெரிய வெள்ளி—இரவு **8** மணி

இடம்: அரங்கசாலை—பசுமலை. அரங்கசாலை 6:30 மணிக்குத் திறக்கப்படும். அதற்கு முன் வராதீர்கள்.

அனுமதி: முதலிரவுத் திருக்காட்சிக்கு டிக்கட்டில்லை. ஆனால் மற்ற இரு திருக்காட்சிகளுக்கும், மெய்யான கடவுள் வழிபாட்டில் கலந்துகொள்பவர்களை மட்டும் அனுமதிக்கும் நோக்கத்தோடு தலை ஒன்றுக்கு 4 அணு வீதம் டிக்கட் வசூலிக்கப்படும். இந்த திருக்காட்சியை பக்திவினயத்துடன் பார்க்கத் தெரியாத சிறு பிள்ளைகளைக் கொண்டுவராமலிருப்பது நல்லது.

வேண்டுகோள்: பவனியோடு பாடப்படும் ஆரம்ப கீதத்திலிருந்து துவக்க மணியடிக்கும் வரை தெய்வ வழிபாட்டுக்குரிய ஜெபசிந்தையோடு யாவரும் அமைதியாயிருப்பதை எதிர்பார்க்கிறோம்—கைதட்டல், உரக்கப் பேசல், வெற்றிலை-பாக்கு-புகையிலை போடல், இளாகிரி வஸ்துக்களை உபயோகித்தல் முதலியவற்றிற்கு இங்கு இடமில்லை.

பலத்த மழையிருப்பின் திருக்காட்சி நடைபெறாது.

இம் மூன்று இரவுகளிலும், திருக்காட்சி முடிந்த பின், பசுமலையிலிருந்து மதுரை மத்திய மோட்டார் நிலையத்திற்கும், மஹாலுக்கும் விசேஷ மோட்டார்கள் விட T.V.S. கம்பெனியார் அன்புடன் இசைந்துள்ளார்.

ஒவ்வொரு இரவிலும் முழு நாடகமும் நடைபெறும். சுமார் இரவு 10 மணிக்கு 20 நிமிட இடை நேரம் விடப்படும். முன் வாசலில் சிற்றுண்டிகள் விலைக்குக் கிடைக்கும். திருக்காட்சி இரவு 12 மணிக்கு முடியும். இத் திருகாட்சியின் செலவுகளுக்கு நன்கொடை அளிக்க விரும்புகிறவர்கள் ஆங்காங்கு வைக்கப்பட்டுள்ள காணிக்கைக் கலயங்களில் போடலாம்.

பசுமலைத் திருச்சபையார்

## சில முக்கிய தமிழ் நூல்கள்

| நூலின்பெயர் | விலை | கிடைக்குமிடங்கள் |
|---|---|---|
| ஜனநாயக புரட்சியும் பொதுவுடைமை கட்சியும் | அணு 6 | திருக்காட்சி நடக்கும் இரவுகளில் அரங்கசாலை, பசுமலை. |
| பிரேயின் எழுதிய அவரிலிருந்த வெளிச்சம் | அணு 8 | |
| உன்னத வழிகாட்டி (காலக் கிரமப்படி வகுத்த நான்கு சுவிசேஷங்களின் தொகுப்பு) | அணு 2 | மதுரை இராமநாதபுர அத்தியட்சாதீனப் புத்தகசாலை, Y.M.C.A., மதுரை. |
| மக்களின் மாபெரும் தலைவர். (முப்பத்துமூவர் வரலாற்றுக் குறிப்புகள்) | அணு 6 | பசுமலை வேதசாஸ்திரப்பள்ளி. |
| தெய்வீக அன்பு பாடல்களும் வசனமும் | அணு 4 | பசுமலை பள்ளிக்கூட புஸ்தக டிப்போ. |

**5.** இந்திய ஓய்வுநாள் பள்ளிக்கூட விடுமுறை பள்ளி

இது குன்னூரில் ஏப்ரல் 22 முதல் மே 10 வரை நடைபெறும். வேத ஆராய்ச்சி, வேதபொருளடக்கம், வேத போதனுமுறை, சிறுவர் சாஸ்திரம், ஓய்வுநாள் பள்ளிகளின் அமைப்பு, கிறிஸ்தவ கல்வி, தியானம், ஆகியவற்றின் சம்மந்தமாய் நடைமுறையில் அனுஷ்டிக்கும் உபகரணங்களும், திட்டங்களும் படித்துக் கொடுக்கப்படும். 35 பேருக்கு இடமுண்டு. பயிற்சி பெற விருப்பமுள்ளவர்கள் மார்ச்சு 20உ க்குள்

The Administrative Secretary,
India Sunday School Union,
Conoor.

என்ற விலாசத்திற்கு விண்ணப்பித்துக்கொள்ளவும்

**6.** தமிழ்நாட்டு கிறிஸ்தவ மாணவர் சங்க சுவிசேஷ ஊழியம் (S.C.M. Camp) முதுகுளத்தூர்.

"யாரை அனுப்புவேன், யார் நம்முடைய காரியமாய் போவான்" என்ற ஆண்டவரின் சத்தம் தமிழ்நாட்டு கிறிஸ்தவ மாணவர் சங்கக் காரியதரிசி உயர் திரு. ஞானராஜ் தானியேல் மூலமாய் தொனித்தது. இந்த அழைப்பிற்கு திருமறையூர் தமிழ்நாட்டு வேதசாஸ்திரக் கல்லூரி, நாகர்கோவில் ஸ்காட்கிறிஸ்தவ கல்லூரி, பாளையங்கோட்டை பரி. யோவான், சாராள் டக்கர் கல்லூரிகள், மதுரை அமிரிக்கன், டோக் அம்மையார் கல்லூரிகள், திருச்சிராப்பள்ளி கிறிஸ்தவ வாலிபர் சங்கம் முதலிய திருச்சபை அங்கங்கள் "இதோ இருக்கிறோம், எங்களை அனுப்பும்" என்று மனப்பூர்வமாய் ஒப்புக்கொடுத்ததின் பயனாக



ஆண் பெண் ஆகிய இரு மிஷனரிமார் மூன்று கல்லூரி விரிவுரையாளர்கள், மூவரோடு ஒரைந்து மாணவ மாணவிகள் புறப்பட்டு, மதுரை-இராமநாதபுரம் அத்தியக்ஷாதீனத்தைச் சேர்ந்த முதுகுளத்தூர் தாலுகாவிலுள்ள கடலாடி என்னும் கிராமத்திற்கு வந்தனர். பெருமழையின் காரணமாக குறித்த இடம் போய் சேர பிரயாண வசதி தடைப்பட்டதால், தமிழ் லுத்தரன் சுவிசேஷ திருச்சபையின் ஒரு முக்கிய ஸ்தானமும் தென் இந்திய திருச்சபையின் ஓர் அங்கமுமாக விளங்கும் முதுகுளத்தூர் என்னும் தாலுகா தலைமை ஸ்தானத்தில் நற்செய்தி கூறும் சமயம், தெய்வசங்கற்பமாக முடிந்தது.

தென் இந்திய திருச்சபையைச்சேர்ந்த மடத்தகுளம், வீரம்பல் பாஸ்ற்றரேற் குருக்களும், முதுகுளத்தூர் லுத்தரன் சபைக்குருவும், வந்த யாவரையும் வரவேற்று, வேண்டும் வசதி செய்து கொடுப்பதிலும், ஊழியத்திலும் உறுதுணையாய் நின்றனர். லுத்தரன் உயர்தர ஆரம்பப் பாடசாலைத் தலைமை ஆசிரியரவர்களும் அவரது குடும்பத்தினரும், வந்த அனைவருக்கும் புரிந்த கைங்கரியம் மிகவும் பாராட்டத்தக்கது.

ஜனுவரி 14ம் தேதி முதல் 16ம் தேதி முடிய, வந்து குழுமிய யாவரும், தாங்கள் வந்த நோக்கத்தை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாயிருந்தனர். காலை 5.30 மணிமுதல் இரவு 11 மணிவரையிலுங் கூட, ஜெபத்திலும், தியானத்திலும், தெய்வசித்தத்தை ஆராய்ந்து அறிவதிலும், ஊழியம் செய்யும் வழிவகைகளை கேட்டு அறிந்து தெளிவதிலும், ஆவியின் பெலத்தோடு சுவிசேஷத்தை அறிவிப்பதிலும், தங்கள் நேரத்தை சோர்வின்றி பயன்படுமாறு செலவிட்டனர். காலையில் 8—11 மணி வரையிலும், மாலையில் 5—8 மணி வரையிலும் சுவிசேஷஊழியம் நடைபெற்றது. காலையில் இரண்டிரண்டு பேராக சகோதர சகோதரிகள் ஒவ்வொரு வீட்டையும் சந்தித்து அங்குள்ளவர்களுடன் கிறிஸ்துவைக் குறித்துப் பேசி முக்திபெறும் மார்க்கத்தைப்பற்றி சம்பாஷித்து இயேசுகிறிஸ்துவே ஆண்டவரும் ரக்ஷகரும், நமக்கு எல்லாவற்றிற்கும் எல்லாமுமாயிருக்கிறார் என்பதை தெளிவுபடுத்தினர். அவ்வண்ணமே மாலையிலும் பொதுக்கூட்டம் நடத்து முன்னர் வீடுகளைச் சந்தித்து கிறிஸ்துவே நமக்கு வழி, சத்தியம், ஜீவன் என்பதாக அறிவுறுத்தினர். இந்தத்தலைமுறையில் இவ்விடத்தில் சுவிசேஷம் அறிவிக்கப்பட்டது இதுவே முதல் தடவையாகும். சுவிசேஷப்பங்குகள் பாதிவிலைக்கு விற்கப்பட்டு, ஒற்றைத்தாட் பிரதிகள் இலவசமாக வினியோகிக்கப்பட்டன.

இவ்வாறு ஆத்மதாகம் படைத்தோராய் சோர்வின்றியுழைத்துழைப்பின் பயனை அப்போதைக்கப்போதே கண்ணாரக்காண கர்த்தர் கிருபை புரிந்தார். மறுதலித்துப் போயிருந்த மக்கள் மறுமலர்ச்சி

யடைந்தனர். அனலற்றுச்சோர்வடைந்திருந்தவர் புத்துயிரடைந்தனர். இதுகாறும் இருளிலிருந்த இருகுடும்பத்தார், வெளிச்சத்துக்குள் பிரவேசிக்க விரைந்துகொண்டனர். சாத்தானின் அடிமைத்தனத்திற்குட்பட்டிருந்த வாலிபரான மூன்று உயர்குலமக்கள் கிறிஸ்துவுக்கு அடிமைகளாக தங்களை ஒப்புக்கொடுக்க முன்வந்தனர். விதைக்கப்பட்ட ஜீவவிதைகள் ஒன்று முப்பதும் ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாக பலன்தர ஜெபிப்போமாக.

இந்த ஊழியத்தில் தென்னிந்திய திருச்சபையும் தமிழ் சுவிசேஷ லுத்தரன் சபையும் ஒன்று கூடி உழைத்ததின் பயனை கண் கூடாய் காண கர்த்தர் சித்தமானார் அவருக்கே ஸ்தோத்திரம் என்று மடத்தாகுளம் கனம் தானியேல் ஐயரவர்கள் எழுதுகிறார்கள்.

---

## வேத பாடக் குறிப்புகள்

இயற்கையிலிருந்து பாடங்கள்

நதிகள் : எசேக்கியேல் 47

"—அவன் உள்ளத்திலிருந்து ஜீவ தண்ணீருள்ள நதிகள் ஓடும்" (...........ஆவியைக் குறித்து இப்படிச் சொன்னார்)" யோவான் 7 : 38-39

1. "தண்ணீர் கணுக்கால் அளவாயிருந்தது" (வச. 3)
   ஜீவியத்தில் நடை—1 தெச. 2:10 பரிசுத்த நடை
   ஞானமாய் நடத்தல்—கொலே. 4:5, எபே. 5:15
   அன்பிலே நடத்தல்—எபே. 5:2
   ஆவிக்கேற்றபடி நடத்தல்—கலா. 5:25
   உத்தமமாய் நடத்தல்—சங். 84:11, ஆதி. 17 : 1
   மனத் தாழ்மையாய் நடத்தல்—மீகா 6:8
   பாத்திரராய் நடத்தல்—1 தெச. 3:11

2. "தண்ணீர் முழங்கால் அளவாயிருந்தது" (வச. 4)
   ஜெப ஜீவியமும், பரிந்து பேசுதலும், தொழுது கொள்ளுதலும்
   "பரிசுத்த அலங்காரத்துடனே கர்த்தரை தொழுதுகொள்ளுங்கள்"
   ஜெப வீரன், "பலவீனமான பக்தனை அவனது முழங்கால்களிலே சாத்தான் பார்க்கும் போது நடுங்குகிறான்."



3. "தண்ணீர் இடுப்பளவாயிருந்தது" (வச. 4)
   சக்தியின் இருப்பிடம். மற்றவர்களுக்கு உதவி செய்யப் பலம். சத்தியத்தால் இடைக் கட்டப்படல் எபேசி. 6:14
   கடவுளின் பூரண சித்தத்தை செய்யும் படி இடை கட்டப்படல் எரே. 2:17
   கடவுளின் வருகைக்காக விழிப்போடு காத்திருக்கும்படி இடை கட்டப்பட—லூக். 12:35
   ஆண்டவராகிய இயேசுவுக்காக எந்த நல்ல ஊழியத்தையும் எவருக்கும் செய்யும்படியாக அரைகட்டப்பட—லூக். 17:8
   ஊழியத்திற்காக அரை கட்டப்பட, மனதின் அரைகட்டப்பட 1 பேது. 1:13

4. "தண்ணீர் நீச்சாளமும்..........."

   ஆவியால் நடத்தப்பட்டு ஆவியால் அடக்கப்படல். சொந்தக் கால்களில் நிற்க முடியாது. தன்னில், தனது மாமிசக் கையின் மேல் நம்பிக்கையில்லை. கடவுளுக்கு முழுவதுமாய், அவரது பூரணசித்தத்தைச் செய்ய ஒப்புக் கொடுத்தல். என் சித்தமல்ல அவருடையதே. அவ்வித ஜீவியமே, ஆத்துமாக்களை ஆதாயம் செய்வதும் ஆசீர்வாதமுள்ள ஜீவியம்.

(— யூத் பத்திரிகை)

---

## சிறுவர் பகுதி

(கனம் அ. செல்லப்பா எட்வர்டு, நிலக்கோட்டை)

"என் நெருக்கத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன்; அவர் எனக்குச் செவிகொடுத்தார்". சங்கீதம் 120 : 1.

எஸ்தர் ஓர் ஏழை விதவை; நெற்றி வியர்வை நிலத்தில் சிந்த கூலி வேலை செய்து வாழ்ந்து வந்தாள். அவ்விதம் அவள் உழைத்து வந்த போதிலும் கூட சில தினங்களில் அவளுக்கு வேலை கிடைக்காமற் போனால், அவளும், லீனா என்ற அவள் மகளும், பட்டினியால் வருந்தத்தான் வேண்டியிருந்தது. அந்நிலையிலும் அவர்கள் கடவுளையே தங்கள் துணைவராகக் கொண்டு, வாழ்ந்து வந்தனர். அவ்வூர் கிறிஸ்மஸ் பண்டிகையும் நெருங்கியது. அதற்கு மூன்று நாட்களிருந்தன. அதனால் அவ்வூர்க் கிறிஸ்தவர்கள் தங்கள் வீடுகளை வெள்ளையடித்து பூக்களாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கத் தொடங்கினர்.

எஸ்தரும், லீனுவும் தங்கள் சிறிய வீட்டைச் சுத்தம் செய்து அலங்கரிக்க விரும்பினர். வேலை கிடைக்காமல் அன்றைய உணவிற்கே வருந்தும் நிலையில், எப்படி கிறிஸ்மஸ்ஸை நாம் கொண்டாடுவது என்று எண்ணினர். எவ்வாறெனினும், நம் கடவுள் நம்மை வழி நடத்துவாரென்று நினைத்துக்கொண்டு, வேலைக்காக எஸ்தர் ஊருக்குள் புறப்பட்டாள் இரவும் வந்தது வேலைகிடைக்காமல் எஸ்தர் வருத்தத்துடன் வீடு திரும்பினுள். வீட்டில் லீனுவை அழைத்து, எஸ்தர் "மகளே! உன்னையும், என்னையும், பல ஆண்டுகளாக நம் கடவுள் நம்மை வழி நடத்தி வந்திருக்கிறார்: இனிமேலும் நம்மை நடத்துவார்; "ஆபத்துக் காலத்தில் என்னை நோக்கிக் கூப்பிடு. நான் உனக்கு உத்திரவு அருளுவேன்" என்று பன்முறை சொல்லியிருக்கிருர். "காக்கைக் குஞ்சுகளைக் காக்கிறவர், நம்மையும் போஷிப்பார். அதனுல், நீ கோவிலுக்குப் போய் எனக்கு வேலை கிடைக்கும்படி ஜெபி" என்று அழுகையுடன் கூறினுள். லீனு உடனே அவ்வூர் கோவிலுக்குச் சென்ருள். அங்கே ஒருவரையுங்காணேம். உடனே முழங்காலிட்டு லீனு ஜெபிக்கத் தொடங்கினுள். அச்சமயம் ஒரு கிறிஸ்தவ பிரபுவின் மகள் ஜெபிக்கும்படி கோவிலுக்குள் சென்ருள். அங்கே தன்னைப் போன்ற ஒரு சிறுமி ஜெபிப்பதையறிந்து, லீனுவை நெருங்கினுள் தன் தாயாருக்கு வேலை கிடைக்கவேண்டுமென்று லீனு செய்யும் ஜெபத்தைக் கேட்டாள். லீனுவும் ஜெபித்துவிட்டு எழுந்தாள் அவர்களிருவருக்கும் நட்பு ஏற்பட்டது பிரபு மகள் லீனுவை நோக்கி, "நீ செய்த ஜெபத்தை நான் கேட்டேன். இன்றிரவே உன் அம்மாவை என் வீட்டிற்கு அழைத்துவா. எம் அம்மாவிடம் சொல்லி நான் உன் அம்மாவிற்கு வேலை வாங்கித்தருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்ருள். மகிழ்ச்சியுடன் லீனு வீடு திரும்பினுள். அவள் எஸ்தரை நோக்கி "அம்மா! நான் செய்த ஜெபத்தைக் கர்த்தர் கேட்டார்" என்று கூறிவிட்டு அங்கு நடந்தவற்றையெல்லாம் எடுத்துரைத்தாள்.

அதற்கு எஸ்தர் ஆம் மகளே! கர்த்தர் உண்மையாகவே உன் ஜெபத்தைக் கேட்டார் என்று கூறிவிட்டு இருவரும் பிரபுவின் இல்லம் ஏகினர். பிரபுவின் மனைவியும் எஸ்தர் மீது இரக்கங்கொண்டு, அவளைத் தன் ஊழியக்காரியாக நியமித்தாள். கிறிஸ்மஸ் தினமும் வந்தது. எஸ்தரும் லீனுவும் பிரபு வீட்டாரோடு சேர்ந்து கிறிஸ்மஸ்ஸை மகிழ்ச்சியுடன் கொண்டாடினர். ஆகவே, சிறுவர்களே! சிறுமிகளே! நமக்கு நெருக்கம் வந்த சமயத்தில், இதுவே நாம் தேவனைக் கிட்டிச் சேருவதற்கு ஒரு நல்ல தருணமென நினைத்து, அவர் பாதம் சேர்ந்து, மன்ருடி, அவரது கிருபையைப் பெறுவோமாக.

---



# தென் இந்திய சபையும் புறதேச பண உதவியும்

(மகா கனம் எயிச். சுமித்திரா அத்தியட்சர்)

"தென் இந்திய சபை ஒரு சுயாதீன சபை. அது தனக்கு வெளியேயுள்ள வேறெந்த சபைக்கும், சமுதாயத்துக்கும் கட்டுப்பட்டதல்ல" (சபைச்சட்டம் 11 : 18)

மேற்கூறிய வாக்கியம், நமது தென் இந்திய சபைச் சட்டப் புஸ்தகத்திலுள்ளது. இது நமது சபையின் தற்கால நிலைமையைக் குறிக்காமல் சபை இனிமேல் அடையப்போகும் ஒரு நிலையைக் குறிக்கிறது. ஏனென்ருல், தற்காலத்தில் தென் இந்திய சபையைச் சேர்ந்த 14 அத்தியட்சாதீனங்களும் மேற்கத்திய தேசங்களிலிருந்து ஏராள பணத்தையும் மிஷனெரிமார் சேவையையும் பெற்று வருகின்றன. மேற்கத்து தேசத்திலிருந்து மிஷனெரிமாரையும் பணத்தையும் அனுப்புகிறவர்கள் நமது சுயாதீனத்தை மட்டுப்படுத்துகிறதில்லை வாஸ்தவமே. அவர்கள் இந்தியாவிலுள்ள அத்தியட்சாதீனத்துக்கு அனுப்பப்படும் மிஷனெரிமாரை உபயோகிப்பதிலும், பணத்தை உபயோகிக்கிறதிலும் சுயாதீனம் கொடுத்திருக்கிருர்கள்.

ஆனுல் நமது சபைத் தலைவர்களும் சபை ஊழியரும், இவ்வித நிலைமை இருக்கிறது போதும் என்றும், மாற்றம் வேண்டாம் என்றும் நினைக்கிறது போல் காணப்படுகிறது. சபை ஊழியம் வளரும் போதும் ஊழியத்துக்கு கூடுதல் சாவகாசம் காணப்படும்போதும், மேற்கத்திய தேசத்திலிருந்து கூடுதல் பணம் வேண்டும் என்று மேல்நாட்டுத் தாய் சபைகளைக் கேட்கிருர்கள் மேற்கத்திய தேசத்திலிருந்து பணம் அனுப்புகிறது குறையும்போது, நம் நாட்டில் நடத்தப்படும் ஊழியமும் குறைகிறது. நமது தேசத்து கிறிஸ்தவர்கள் மிகவும் ஏழைகளானதால், மேற்கத்து தாய் சபைகளிலிருந்து பணம் குறைவாய் அனுப்பப்படும்போது, இங்குள்ள வேலையும் குறைக்கப்படுகிறது இயற்கை என்று கண்ணுற்று தங்களுடைய ஈகையை அதிகப்படுத்தவேண்டும் என்பதை உணராதிருக்கிருர்கள்.

இவ்விதமான மனநிலை மாறவேண்டும். நாட்டில் சுவிசேஷம் பரம்பவேண்டுமானுல் நாம் நம்மையொறுத்து காணிக்கைக் கொடுக்க வேண்டும். தற்காலத்தில் நமது சபையின் நெருக்கடியை நீக்க வேண்டுமானுல் நாம் கூடுதலாக சுயவெறுப்பாய்க் கொடுக்கவேண்டும்.

நாம் மேற்கத்திய சபைகளுக்கு நன்றிகூறக் கடமைப்பட்டிருக்கிருேம். மேற்கத்திய சபையார் இந்திய சபைக்கு எத்தனை கோடி ரூபாய் கொடுத்து உதவி செய்கிருர்கள் என்று கணக்கிட முடியாது. ஏராள பண உதவி நம் நாட்டுக்கென்று நமது தாய்ச்

சங்கத்தார் செலவிடுகிறார்கள். தற்காலத்திலும் நமது தென் இந்திய சபையைச் சேர்ந்த 14 அத்தியட்சாதீனத்துக்கு அனுப்பும் மிஷனெரி மார் தொகையையும், பண உதவியையும் கீழே குறிப்பிட்டிருக்கின்றன.

| | அத்தியட்சாதீனம் | கிறிஸ்த வர்கள் மொத்தம் | சபையில் பிரிவு மொத்தம் | தாய்சங் கம்அனு ப்புவது | மிஷ னெரி மார் |
|---|---|---|---|---|---|
| 1. | கோயம்புத்தூர் .... | 33125 | 78878 | 49427 | 29 |
| 2. | தோர்ணக்கல் .... | 103498 | 107906 | 110659 | 13 |
| 3 | யாழ்ப்பாணம் .... | 4273 | 99958 | 17912 | 2 |
| 4. | கிருஷ்ணு-கோதாவரி .... | 37851 | 108300 | 147925 | 12 |
| 5. | கேரளா .... | 26617 | 68221 | 48970 | 3 |
| 6. | சென்னை .... | 66035 | 250000 | 547702 | 85 |
| 7. | மதுரை-ரும்னுட் .... | 48608 | 90950 | 121830 | 21 |
| 8. | மெடெக் .... | 103950 | — | — | — |
| 9. | மைசூர் .... | 32860 | 110000 | 230245 | 46 |
| 10. | ருயலசீமா .... | 45523 | 45000 | 236337 | 10 |
| 11. | திருநெல்வேலி .... | 133512 | 325000 | 66600 | 10 |
| 12. | மத்திப திருவிதாங்கூர் | 89017 | 280000 | 38000 | 4 |
| 13. | தென் திருவிதாங்கூர் .... | 148058 | 184500 +80000 | 80000 | 11 |
| 14. | திருச்சினுப்பள்ளி-தஞ்சாவூர் | 68648 | 70664 | 284404 | 24 |

(—தேசோபகாரி)

---

## இயேசுவின் ஜெபப்பள்ளி.

ஐந்தாம் பாடம்

'கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கோடுக்கப்படும்.' அல்லது ஜெபத்திற்குப் பதில் கிடைப்பது உறுதி.

'கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கோடுக்கப்படும்; தேடுங்கள், அப்பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்; ஏனென்றால், கேட்கிறவன் எவனும் பெற்றுக்கோள்ளுகிறுன்; தேடுகிறவன் கண்டடைகிறுன்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்.' மத். 7: 7, 8.



'நீங்கள் விண்ணப்பம் பண்ணியும் .... தகாதவிதமாய் விண்ணப்பம் பண்ணுகிறபடியினால், பெற்றுக் கோள்ளாமலிருக்கிறீர்கள்.' யாக்கோபு 4: 3

நமதாண்டவர் ஜெபத்தைப் பற்றி இங்கு மீண்டும் போதிக்கிறார். இதற்கு முன்னர், அந்தரங்கத்திலிருக்கிற பரமதந்தையை கண்டடையும் முறையைப்பற்றியும் அவர் வெளியரங்கமாய்ப் பலனளிக்கும் துறையைப் பற்றியும் போதித்து, மத்தேயு 6ம் அதிகாரம் 5 முதல் 15 வாக்கியங்களுள் அடங்கிய மாதிரி ஜெபத்தைத் திருவாய் மலர்ந்தருளினார். ஜெபம் நிச்சயமாய்க் கேட்கப்பட்டு, நிச்சயமாய்ப்பதிலளிக்கப்படும் என்கிற, ஜெபத்தின் தலையாய போதனை வேதாகமம் முழுவதிலும் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் பட்டிருப்பதை நமக்குப் போதிக்கவே ஆண்டவர் இங்கு விரும்புகிறார். ஒரே பொருளை உணர்த்தும் சொற்களை எவ்வாறு ஆண்டவர் பயன் படுத்துகின்றார் என்று ஊன்றிக்கவனிப்போமாக. ஒவ்வொரு தடவையிலும், ஜெபத்திற்குப் பதில் நிச்சயம் உண்டு என்ற உயரிய வாக்குத்தத்தத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெளிவாக்கி உறுதிப்படுத்துகின்றார். நீங்கள் பெற்றுக்கோள்வீர்கள் (ye *shall* receive) நீங்கள் கண்டடைவீர்கள் (ye *shall* find) உங்களுக்குத் திறக்கப்படும் (it *shall* be opened unto you) அதன் பின் அத்தகைய உறுதிக்கு, நிச்சயத்திற்கு பரம இராஜியப் பிரமாணத்தை ஆதாரமாகக் காட்டுகிறார். 'கேட்கிறவன் எவனும் பெற்றுக் கோள்ளுகிறுன்; தேடுகிறவன் கண்டடைகிறுன்; தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்.' இவ்விதமாக அறுமுறை மீண்டும் மீண்டும் சொல்வதன் மூலமாக, ஆண்டவர் ஒரு சத்தியத்தை நமது உள்ளங்களில் ஆழமாய்ப் பதிய வைக்க விரும்புகிறார்: நமது ஜெபத்திற்குரிய பதிலைக் கடவுளிடம் பலத்த நம்பிக்கையோடு எதிர்பார்க்க வேண்டும் என்பதே அச்சத்தியமாகும். பரம தந்தையின் அன்பை வெளிப்படுத்தினதற்கடுத்தபடியாக, கேட்கிறவன் எவனும் பெற்றுக் கொள்ளுகிறுன் என்ற இந்த மகா முக்கியமான பாடத்தைப் பார்க்கிலும் சிறந்தபாடம் ஆண்டவர் ஜெபப்பள்ளிப் பாடத்திட்டத்தில் வேறெதுவும் இல்லை.

ஆண்டவர் கையாளுகிற 'கேளுங்கள்', 'தேடுங்கள்', 'தட்டுங்கள்' என்ற மூன்று சொற்களும் வெவ்வேறு பொருளுடையன. கேளுங்கள் என்ற சொல் நாம் விண்ணப்பிக்கும் பொருட்களைக் குறிக்கும். ஆனால் நாம் கேட்பதைக் கொடுப்பவரில்லாமலே பெற்றுக் கொள்ளக் கூடும். தேடுங்கள் என்ற வேதாகமச் சொல் கடவுளைத் தேடுவதையே வற்புறுத்தும். நாம் கடவுளைக் கண்டடைய முடியுமென்று கிறிஸ்து உறுதிதருகிறார். நமது தேவைகளில், இக்கட்டில், இடர்ப்பாட்டில்மட்டும் கடவுளைத் தேடுவது போதாது.

அவருடன் நிலையான ஐக்கியத்திற்காகவே அவரைத் தேட வேண்டும். **தட்டுங்கள்** என்ற சொல் அவரோடு, அவருக்குள் தங்க அனுமதி கேட்பதையே குறிக்கிறது. கேட்பதும், கேட்டவற்றைப் பெறுவதும் அவற்றைக் கொடுப்பவரைத் தேடவும் கண்டடையவும் நம்மை நடத்துகிறது. இதுவே பரம தந்தையின் வீட்டைத் தட்டவும், கதவு திறக்கப்படவும் அவரது அன்பைப் பெறவும் உதவுகிறது. கேட்பதும், தேடுவதும், தட்டுவதும் வீண்போகாது என்பதை ஆண்டவர் நமக்குப் பெரிதும் உறுதிப்படுத்துகிறார். ஜெபத்திற்குப் பதில் பெறுவதும், கடவுளைக் காண்பதும் ஜெபத்தின் நிச்சயமான கனிகளாகும்.

இந்த ஒப்புயர்வற்ற உண்மையை உள்ளத்தில் பதிய வைப்பதற்காகவே ஆண்டவர் பல தடவைகளில் பல விதத்தில் அவ்வுண்மையை மீண்டும் மீண்டும் வற்புறுத்துகிறார். ஆண்டவர் நமது இருதயத்தை அறிந்தவர். கடவுளிடத்தில் நாம் இயற்கையாகவே எவ்வளவு சந்தேகமும் அவநம்பிக்கையும் உடையவர் என்பதைத் தெரிந்தவர். ஜெபித்தும் அதற்குப் பதிலைப் பெறாது போகும்படி நாம் எவ்வளவு அஜாக்கிரதையாய் ஜெபிக்கிறோம் என்பதையும் உணர்ந்தவர். இக்காரணங்கள் பற்றியே அவர் அவ்வாறு வற்புறுத்துகிறார். கடவுள் ஜெபத்துக்குச் செவி கொடுக்கிறவர் என்று நாம் விசுவாசித்த போதிலும், ஜெபமானது ஆத்மீகத்தன்மையது, மகோன்னதமானது; ஆதலால் அரைமனதுடைய அடியாருக்கு அது அதிகக் கடினமானது என்பதையும் ஆண்டவர் தெரிந்திருக்கிறார். ஆதலாலேயே ஜெபம் வல்லமையுடையது. கேளுங்கள் அப்பொழுது நிச்சயமாகப் பெற்றுக் கொள்வீர்கள். இதுவே நிச்சயமான நிரந்தரமான, நித்தியமான கடவுள் இராஜியப் பிரமாணம். நீங்கள் விண்ணப்பித்தும் பெற்றுக் கொள்ளாவிடில் உங்கள் ஜெபத்தில்தான் ஏதோ கோளாறு இருக்கிறது. எனவே தொடர்ந்து ஜெபியுங்கள். தேவ வசனமும் பரிசுத்தாவியும் சரியான முறையில் ஜெபிக்க உங்களுக்கு அருள் செய்யும் என்பதை அழுத்தம் திருத்தமாய்க் கூறுகிறார்.

"கேளுங்கள் அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்" கணக்குச் சரியாயிருக்கிறது என்பதை ஒரு மாணவன் மெய்ப்பிப்பது போல நாம் சரியாக ஜெபித்திருக்கின்றோம் என்பதை நிரூபிப்பது அதற்குக் கிடைக்கும் பதிலேயாகும். நாம் கேட்டும் பெற்றுக் கொள்ளாவிடில், நமக்குச் சரியான முறையில் ஜெபிக்கத் தெரியவில்லை என்பதே அர்த்தம். கேட்கிற எவனும் பெற்றுக் கொள்ளுகிறான் என்ற ஆண்டவரின் பிரமாணத்தை இயேசுவின் ஜெபப் பள்ளியில் இருக்கும் எல்லோரும் ஐயந்திரிபற அறிவது அத்தியந்த அவசியம். நமது குறைவான அறிவால் தெய்வவாக்கின் வன்மையை பெலவீனப் படுத்தாதிருப்போமாக. அவர் மறுமைக்



குரிய காரியங்களைக் கூறும்போது அவரில் நம்பிக்கை கொள்ளுவோமாக. அவரது அருள் மொழியே அதனை முற்றும் நம்புகிறவனுக்குத் தெற்றென விளக்கும். நமக்குச் சிக்கலான பிரச்சனைகளும் கஷ்டங்களும் எழும்போது, தெய்வவாக்கை ஒப்புக் கொண்ட பிறகு தான் அவற்றிற்கு முடிவு கட்ட முயல வேண்டும். அதிலும் அவரிடமே அவற்றை ஒப்புவிப்பது சாலச் சிறந்தது. அவரே அவற்றை முடிவு செய்ய வேண்டும். ஆதலின் அவரது திருவாக்கை முற்றும் ஒப்புக் கொண்டு உறுதியாய் நிற்றலே நமது முதற்கடன். நமது அந்தரங்க அறையில், நமது அந்தரங்க இதய அறையில் ஒளியின் பொன்னெழுத்துக்களாய் அது பொறிக்கப்படவேண்டும். "கேட்கிற எவனும் பெற்றுக் கொள்ளுகிறான்."

நமது ஆண்டவர் அருளிய இப்போதனையின் பிரகாரம் மனிதப் பகுதி, தெய்வப்பகுதி என இரு பகுதிகள் ஜெபத்தில் உள. கேட்பது மனிதப் பகுதி. கொடுப்பது தெய்வப் பகுதி. அல்லது மனிதப் பகுதியின்படி நோக்கினும் அதில் கேட்டல், பெற்றுக் கொள்ளல் என்ற இரு கூறுகள் உள. கடவுள் குடும்பத்தில் ஆழ்ந்து கிடக்கும் உயரிய சட்டம் ஜெபத்திற்குப் பதில் பெறாது இருக்க வேண்டாம் என்பதேயாகும். ஏனெனில் குழந்தை மனம் படைத்த ஒவ்வொரு விண்ணப்பமும் பதிலளிக்கப்படும். நமது ஜெபத்திற்குப் பதில் வராவிடில் அது கடவுளுடைய சித்தமன்று என்று கருதி ஜெபத்தை விட்டுச் சும்மா இருத்தல் கூடாது. பதில் வராவிட்டால் நமது ஜெபம் கடவுள் விரும்புகிறபடி இராதிருக்கலாம். குழந்தை போன்ற விசுவாசம் நம்மில் குறைவாயிருக்கலாம். ஜெபத்திற்குப் பதில் பெறாமல் வெறுமனே விட்டுவிடுவது மாமிசத்திற்கு மிக எளிது. ஆனால் விசுவாசமுடைய ஜெபத்தை ஜெபிக்கப் பழகும்வரை பரிசுத்த ஆவியானது நமது குறைகளை ஆராய்ந்து அதனைப் புனிதப் படுத்தும்படி விடுவது கடினம்.

ஜெபத்திற்கு திட்டவட்டமான பதிலைப் பெறாதிருக்கும் நிலையானது கிறிஸ்தவ அறநெறி வாழ்க்கையில் காணப்படும் பயங்கர நோயின் அறிகுறியாகும். இக்காலத்தில். தினசரி ஜெபிக்கின்றோம். பலவற்றைக் கேட்கின்றோம். அவற்றுள் சில கேட்கப்படும் என்று நம்புகின்றோம். ஆனால் தினசரி வாழ்க்கையில் ஜெபத்திற்குத் திட்டவட்டமான, நேர்முகமான பதில் கிடைக்கும் என்கிற பிரமாணத்தை அறியாது அவதிப்படுகின்றோம். நமது பரமதந்தை விரும்புவது யாதெனில் தமது பிள்ளைகளோடு தினசரி ஐக்கியப்பட்டு, அவர்கள் கேட்பதற்குச் செவிகொடுத்து, அவர்களுக்கு அருள் செய்ய நாடுவதேயாகும். நாம் திட்டவட்டமான விண்ணப்பங்களோடு நாளுக்கு நாள் அவரை நெருங்கிச் சேரவேண்டுமென்பதே அவரது திருவுள்ளச் சித்தம். சங்கீதக்காரன் சங்கீதம் 34லிலும் 66 : 19லும் 116:1

லும் கூறுகிறபடி, பண்டையப் பரிசுத்தவான்கள் கடவுளே ஜீவனுள்ளவர் என்று அறியவும், அதனால் அவரை வாழ்த்தவும், அவரில் அன்புகூரவும், அடிப்படையாயமைந்தது அவர்கள் கேட்டுக் கொண்டவை அனைத்தும் அவரால் அருளப்பட்டன என்பதே இதனையே நமது தெய்வீக ஆசிரியர் நமதுள்ளங்களில் பசுமரத் தாணிபோல் பதிய வைக்க ஆசிக்கின்றார்.

சில ஜெபங்கள் கேட்கப்படாமற் போவதுண்டு. அதற்குக் காரணம் கடவுள் அருள்மொழியின்படி ஜெபியாததேயாகும். மோசே கானானுக்குள் பிரவேசிக்க விரும்பி விண்ணப்பித்தான். ஆயினும் கடவுள் அவன் விண்ணப்பத்தைக் கேளாமலிருக்கவில்லை. பதில் அருளத்தான் செய்தார். நமது பரம பிதா தமது திருக்குமாரனாகிய இயேசுபிரானின் கெத்செமனே ஜெபத்திற்குப் போலவே தாம் எப்போது பதில் கொடுக்க முடியாது என்பதை தமது அடியாருக்குத் தெரிவிக்கின்றார். கடவுளின் தாசனான மோசேயும் அவரது திருக்குமாரனான இயேசுபிரானும் தங்கள் ஜெபங்கள் கடவுளின் திருவுள்ளச் சித்தத்துக்கு இசைந்தனவாக இருக்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்டனர். பக்தர்களின் ஜெபங்கள் அவருடைய திருச்சித்தத்துக்கு ஏற்றவையா? இல்லையா? என்பதைச் சத்திய வேதாகமத்தாலும் பரிசுத்தாவியாலும் தீர்மானிக்கும்படி காலம் தருகிறார். அவரது சித்தத்துக்கு ஒத்ததாயிராவிடில் நமது விண்ணப்பத்தை வாபஸ் செய்வோமாக. அவரது சித்தத்திற்கு இசைந்ததாக நமது ஜெபம் இருக்கும் பட்சத்தில் அதற்குப் பதில் கிடைக்கும் வரை விடாமுயற்சியுடன் முயல்வோமாக. பதில் பெறுவதே ஜெபத்தின் இலக்கணம். பரமதந்தைக்கும் அவரது தனையனுக்குமுள்ள அன்புப் பரிமாறல், ஜெபத்திலும் ஜெபத்திற்குப் பெறும் பதிலிலுமே அமைந்திருக்கின்றது.

அத்தகைய வாக்குத் தத்தங்களை அறிந்து பயன்படுத்தாது அவதிப்படுகின்றோம். நாம் வேதவாக்குகளை ஒப்புக் கொண்டாலும், அவற்றை உண்மை என்று நம்பினாலும், முழுவிசுவாசமும் அதனால் வரும் அகமகிழ்ச்சியும் மெதுவாகவே வருகின்றன. இதற்குக் காரணம் நமது ஆத்மீக வாழ்க்கை இன்னும் பெலவீனமாயிருப்பதும் கடவுட் கருத்துக்கள் பலப் படாதிருப்பதுமேயாகும். ஆனால் நமது ஆண்டவரை அணுகி அவரது போதனையை யறிவோமாக. அவரது அருள்மொழிகளை அப்படியே ஒப்புக்கொண்டு அவற்றை நமது வாழ்வும் வன்மையுமாகச் செய்யும்படி பரிசுத்தாவியின் உதவியைத்தேடி அவரில் நம்பிக்கை வைப்போமாயின் அவை நம்முள் பிரவேசிக்கும். அவற்றின் தெய்வீக மெய்ப்பொருள் நம்மை ஆளும். நாம் ஜெபிக்கும் ஒவ்வொரு விண்ணப்பமும் "கேளுங்கள். அப்



பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும்" என்ற ஆண்டவரின் அருள்மொழிப்படி கடவுள் சன்னிதியை யடையும் என்ற உறுதியை நம்முள் பிறப்பிக்கும்.

ஆகையால் இயேசுவின் ஜெபப்பள்ளியில் பயிலும் மெய்யன்பரே, இந்த உயரிய போதனையை நமக்குச் சொந்தமாக்கிக் கொள்ளுவோமாக. அம்மொழிகளை அப்படியே ஒப்புக்கொள்ளுவோமாக. அவற்றின் சக்தியை உடைக்கின்ற நமது பகுத்தறிவால் அதனைத் தடை செய்யாதிருப்போமாக. அவற்றை அப்படியே நம்புவோமாக. அவற்றின் ஆழ்ந்த கருத்துக்களை நாளாவட்டத்தில் நமக்கு அவர் விளக்குவார். அதற்கு முதற்படியாக அவரது மொழிகளை அப்படியே விசுவாசிப்போமாக. அடிக்கடி நாம் ஜெபிக்கும்போது அவரது மெல்லிய குரலுக்கு நாம் செவிகொடுக்க நெடுநேரம் காத்திருப்போமாக. நமது விசுவாசம் எதிர்பார்க்கக் கூடியவற்றை நமது அவிசுவாச அளவைகளால் களங்கப்படுத்தாதிருப்போமாக. ஜெபநேரத்தில் மட்டுமின்றி என்றும் எப்பொழுதும் அவரது உறுதி மொழியையறிந்து அனுபவிக்க அவரை அணுகுவோமாக. மண்ணில் மனிதனின் ஜெபமும், விண்ணில் இறைவனின் பதிலும், ஆண்டவன்—அடியான் என்ற இருவருக்கும் ஐக்கியம் ஏற்பட அமைந்தவை.

## ஜெபம்

ஆண்டவரே! எனக்கு நீர் வாக்களித்துள்ளவற்றை விளங்கிக் கொள்ளவும் விசுவாசிக்கவும் எனக்குப் போதித்தருளும். ஜெபத்திற்கு பதில் வராதற்குக் காரணம் நீரே அறிவீர். பரம தந்தையின் அந்தரங்க ஆலோசனைக்கு அடுக்காததாயிருக்கலாம் என் ஜெபம். நான் கேட்பதிலும் சிறந்த ஒரு நன்மையை நீர் அருளச் சித்தமாயிருக்கலாம். அல்லது ஜெபத்திற்குப் பதில் கிடையாது போயினும் கடவுளோடு ஐக்கியப்படும் ஆசியே ஜெபத்திற்குப் போதுமானதாயிருக்கலாம். ஆயினும் ஜெபத்திற்குக் கட்டாயம் பதிலை எதிர்பார்க்க வேண்டும் என்று நீர் போதிக்கின்றீர். இதுவே தந்தைக்கும் தனையனுக்குமுள்ள பரஸ்பரத் தொடர்பு என்று உறுதி கூறுகின்றீர். அடியான் கேட்கின்றான், ஆண்டவன் அருள் செய்கின்றான். நான் தகாதவிதமாய் ஜெபிப்பதனால் ஜெபத்திற்கு பதில் பெறாதிருக்கலாம். பரிசுத்தாவியோடு நான் அதிகம் நெருங்காதிருக்கலாம், என் ஜெபத்தில் விசுவாசக் குறைவிருக்கலாம். ஆண்டவரே! உம்மை நம்புகின்றேன். விசுவாசத்தோடு ஜெபிக்க எனக்குப் போதித்தருளும். ஏனெனில் "கேட்கிறவன் எவனும் பெற்றுக் கொள்ளுகிறான்" என்று நீரே அருள் செய்திருக்கின்றீர். ஆமென்



---

# அகில லோக திருச்சபையின் மகாநாடு

(கனம் உவைட் ஐயர், பசுமலை)

1954-ஞு ஆகஸ்டு மீ 15-31உ அகில லோக திருச்சபையின் மகாநாடு அமெரிக்கா தேசத்திலுள்ள எவன்ஸ்டன் என்னும் நகரத்தில் நடைபெறும் இப்பேர்ப்பட்ட அகில லோக திருச்சபை கூட்டம் கூடுவது இரண்டாவது தடவையாகும். அச்சமயம் சபைகளின் பிரதிநிதிகளாக சுமார் 1200 பேர்களும் இன்னும் அநேக பெரியவர்களும் அப்பொழுது அங்கே விஜயஞ் செய்வார்கள். அக்கூட்டத்தில் விசேஷமாய் ஆலோசிக்கப்படும் முக்கிய பொருளாவது: இவ்வுலகத்தின் நன்னம்பிக்கை கிறிஸ்துவே என்பது. அந்தப்பொருள் சம்பந்தமாக ஆலோசிக்கும் விபரமான பொருட்களாவன.

(1) கிறிஸ்துவுக்கும் நமக்குமுள்ள அடிப்படையான ஐக்யம்

(2) சபையில் சேராத மற்ற மக்களுக்குள்ளே திருச்சபை என்ன ஊழியம் செய்யவேண்டியது ?

(3) உலகத்தின் தற்கால சம்பிரதாய விஷயமாய் திருச்சபையின் உத்தரவாதம் என்ன ?

(4) உலக சமாதானத்துக்காக கிறிஸ்தவர்களின் பொறுப்பு என்ன ?

(5) ஒரு ஜாதிக்கும் மற்ற ஜாதிகளுக்குமிருக்கும் தற்காலத்து பிரட்சனைகளையும் குழப்படிகளையும் பற்றி திருச்சபையின் கடமை என்ன ?

(6) கிறிஸ்தவனுக்கு ஏற்பட்ட தொழிலின் நடுவிலே அவன் எவ்விதம் நடந்து கொள்ளவேண்டும் ?

இந்த ஆறு விதமான பொருட்களைப்பற்றி அந்த மகா சபையானது தனித்தனியாக ஜெபித்து ஆலோசிப்பதற்கு ஆறு தனிமையான உட்பிரிவுகளாக இரண்டாவது வாரத்தில் கூட்டம் கூடும். இந்தியாவிலிருந்து அந்த மகா நாட்டுக்குச் செல்லும் பிரதிநிதிகளில் நம் தென்னிந்திய திருச்சபையின் கனம் லெஸ்லி நியூபிகின் என்பவர் ஒருவராக யிருப்பாரென்பதை நாம் நினைவு கூருவது நலம்.

இயேசுநாதர் உலகத்துக்கு அழியாத நன்னம்பிக்கையானவர் என்ற சத்தியத்தை கிறிஸ்தவர்கள் யாவரும் பிரச்சாரஞ் செய்வதற்கு



அழைக்கப் பெற்றிருக்கின்றார்களென்பது நாம் யாவரும் அறிந்த விஷயம் மனுமக்கள் யாவரும் எவ்விடத்திலும் மனந்திரும்பி பரிசுத்த ஆவியின் ஏவுதலால் நிச்சயமாய் கடவுளின் ராஜ்யம் வருவதைக் குறித்து ஆண்டவருடைய வாக்குத்தத்தை ஏற்றுக் கொள்ளும்படிக்கு நாம் அவர்களை அன்புடன் அழைக்க வேண்டும். அந்த பரம ஆட்சியின் சிறந்த குணலட்சணங்களாவன ; சமாதானம், நீதி, சுயாதீனம், ஜீவன், சத்தியம் ஆகியவைகள். அத்துடன் நாம் கிறிஸ்துவுக்குள் அடைந்திருக்கின்ற ஐக்யம் என்னும் திருச்சபையில் எல்லா மனிதர்களும் எங்கும் சேர்ந்துகொண்டு அதனால் கடவுளது பேராசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ளும்படியாகவும் அவர்களை அழைப்பது நமக்கு ஓர் பெரும் சிலாக்கியமே.

கடைசியாக இந்த அகிலலோக மகாநாடு கடவுளின் பெரிய ஆசீர்வாதம் பெறவேண்டுமாகில் கிறிஸ்தவர்கள் எல்லோரும் தனித்தனி ஆளாகவும் கூட்டம் கூட்டமாகவும் அடிக்கடி ஜெபத்திலும் தியானிப்பிலும் தரித்திருந்து வருவது அத்தியந்த அவசியமான காரியம். அப்படிப்பட்ட பிரார்த்தனையின்றி அந்தப் பெரிய கூட்டமானது சித்தி பெற முடியாது என்பது திண்ணம். ஆகவே இந்த விளம்பரத்தைக் கண்டவுடனே திருச்சபையார் அவ்வாறு ஜெபிப்பதற்கு மிக்க அன்புடன் கேட்டுக்கொள்ளப்படுகின்றார்கள்.

இந்த மகாநாட்டைப்பற்றி யாராவது இன்னும் விஸ்தாரமாக அறிய விரும்பினால் அவர்கள் அடியிற்கண்ட மேல்விலாசத்துக்கு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகின்றார்கள்.

Rev. James P. Alter,
Tehri View,
Landour, Missoorie, U.P.
India.

“அவர்களெல்லாரும் ஒன்றாயிருக்கவும், பிதாவே, நீர் என்னை அனுப்பினதை உலகம் விசுவாசிக்கிறதற்காக, நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும் இருக்கிறதுபோல அவர்களெல்லாரும் நம்மில் ஒன்றாயிருக்கவும் வேண்டிக்கொள்ளுகிறேன்”.

(யோ. 17 : 21)

# மதிப்புரை

(கனம் டாக்டர் அன்புநாதன், மதுரை)

ராவ் பகதூர் கடம்பவனம் இயற்றிய சுகம் அளிக்கும் தெய்வ கரம், தமிழ்சபைகளுக்குக் கிடைத்த ஓர் சிலாக்கியம். ஆரம்பத்திலிருந்து முடிவுவரை அர்த்த புஷ்டியுள்ள குறிப்புகள் இதில் அடங்யுள்ளன. பற்பல இடங்களில் எழுப்புதல் கூட்டங்கள் நடத்துவதால் மக்களுடைய சரீர ஆவிக்குரிய தேவைகளைப்பற்றி இவருக்குப் பழுத்த அனுபவம் உண்டு என்று இப்புத்தகத்தில் காணக்கிடக்கிறது. சுயேட்சை ஊழியத்தில் தமது எஜமானுகிய கிறிஸ்துவுக்காக திருப்பணி ஆற்றவேண்டும் என்ற அவா இவருக்கு உண்டு என்பதை இப்புத்தகம் நன்கு புலப்படுத்துகிறது, சோர்ந்து போகாத ஜெபத்தோடு சிகிச்சையின் சம்பந்தமாக, தற்காலத்தில் அமலில் இருக்கும் நவீனமுறைகளையும் கையாட வேண்டும் என்று வற்புறுத்துவது மெச்சத்தக்கது. நேயர்கள் இந்நூலை வாசித்தபின் நித்திய ஊற்றுகிய கடவுளிடமிருந்து ஆவிக்குரிய வல்லமையை பெற்றுக் கொள்வார்களென்று நம்புகிறோம்

நூறுபக்கங்கள் கொண்ட இப்புஸ்தகத்தின் விலை 12 அணு.

இப்புத்தக சம்மந்தமாய் நான் ஆலோசனை கூறுவதாய் இருந்தால் பக்கங்கள் 62-74 முதல் காணப்படும் சாட்சிகளின் விபரங்களை எடுத்துவிடலாம் என்பதே. ஏனெனில் அனுபோகமற்ற வாசகர்களுக்கு இவை தப்பர்த்தத்தைக் கொடுக்கலாம். இப்புத்தகத்தைக் கூர்ந்து வாசிப்பவர்கள் ஆக்கியோன் கூறுவது உண்மை என நம்புவார்கள் இந்நூலில் காணப்படும் படங்கள் அவசியம் அல்ல, கவர்ச்சி கரமானதுமல்ல.

இந்நூல் கிடைக்கு இடம் :—

1 பாளையங்கோட்டை, மதுரை அத்தியட்சாதீன புஸ்தக சாலைகள்.

2 நாகர்கோயில் லண்டன் மிஷன் அட்சகம்

3 சென்னை C.L.S. சங்கத்தார்

4 ஆக்கியோனிடம்

---



# கி. மு. சங்கப் பொருட்கள்
## மார்ச்சு மாதம்—1954

### லெந்து—கிறிஸ்தவ சீஷத்துவம்

மார்ச்சு

,, 1. உபவாசம் லூக். 5 : 33-35
,, 2. சுயவெறுப்பு மத். 16 : 21-24
,, 3 தியானம் சங். 19 : 1-14
,, 4. ஆராதனை எபேசி. 5 : 14-20
,, 5 பலி 1 கொரி 9 : 24-27
,, 6. நடைமுறையில் வாழ்க்கை 1 பேதுரு 4 : 1-7
,, 7. லெந்து நாட்களின் கருத்து லூக் 19 : 28-38
,, 24 : 1-4

### கிறிஸ்துவின் சீஷன்—சீஷனின் கிரயம்

,, 8. கிரயம் லூக். 9 : 57-62
,, 9. கிறிஸ்துவின் கட்டளை யோவான் 13 : 31-35
,, 10 கிறிஸ்துவின் அன்பு யோவான் 14 : 19-24
,, 11. கிறிஸ்துவின் மன்னிப்பு யோவான் 8 : 1-12
,, 12. கிறிஸ்துவின் போஜனமும் பானமும் யோவான் 6 : 35-51
,, 13 கிறிஸ்துவின் நுகம் மத். 11 : 25-30
,, 14. கிறிஸ்துவின் நன்கொடை. வெளி. 3 : 20-22

### கிறிஸ்துவின் சீஷன்—குணலட்சணம்

,, 15. பாக்கிய வசனங்கள் மத் 5 : 1-12
,, 16 உப்பும் வெளிச்சமும் மத். 5 : 12-16
,, 17. நீதி மத் 5 : 17-20
,, 18 பகையும், கொலையும் மத் 5 : 12-16
,, 19. தள்ளுதல் சீட்டும்—பொய் சாட்சியும் மத். 5 : 27-37
,, 20. அஹிம்சை மத். 5 ; 38-42
,, 21. எல்லா மனிதரிடத்தும் அன்பு மத். 5 : 43-48

### கிறிஸ்துவின் சீஷன்—கிறிஸ்துவின் மனமும் தைரியமாக சாட்சிபகர்தலும்

" 22. ஆயத்தம் மாற்கு 1 : 1-8
" 23. ஞானஸ்நானம் மாற்கு 1 : 9-11
" 24. சோதனை மாற்கு 1 : 12-13
" 25. செய்தி மாற்கு 1 : 14-15
" 26. சீஷனாய் இருக்க அழைப்பைப் பெறுதல் மாற் 1 : 16-20
" 27. ஊழியம் மாற் 1 : 21-45
" 28. கிறிஸ்து செலுத்திய கிரயம் பிலிப் 2 : 1-12

### கிறிஸ்துவின் சீஷன் – பரிபூரண ஜீவியம் உக்கிராணம்

" 29. பரிபூரண சந்தோஷம் யோ. 15 : 9-13
" 30. பூரணமாய் கனி கொடுத்தல் யோவான் 15 : 14-25
" 31 பரிபூரண சான்றுகள் யோவான் 15 : 26-27




Lenox Press, Pasumalai. 11—3—'54. 428 c.

